# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே







நம்முடைய இயல்புகள் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அவற்றையெல்லாம் நாம் சீரமைக்கத் தேவையில்லை. நாம் சந்திக்கும் சூழ்நிலையை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்று நம் அறிவு முடிவு செய்கிறதோ அதற்குத் தகுந்த உணர்ச்சிகளே நம்மிடம் வெளிப்படுகின்றன. நமது அறிவை அறிவுபூர்வமாக உபயோகிப்பது தான் – நமது இயல்புகளை வெற்றி கொள்வதாகும்; மாற்றியமைப்பதாகும்.

- ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655




# ஸ்ரீ பகவத் பவனில் 3 நாள் ஞான முகாம்

நாள்: 30-12-2016 வெள்ளிக்கிழமை மாலை 5.00 மணி முதல்
01-01-2017 ஞாயிற்றுக்கிழமை மதியம் 3.00 மணி வரை

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை, கொடம்பக்காடு, பெரியக்கவுண்டாபுரம், சேலம்.

**அனுமதி இலவசம்**

- ஸ்ரீ பகவத் ஐயாவின் 2 நாள் ஞானமுகாம் சேலத்தில் உள்ள ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி தங்கும் வசதி உள்ளது.
- **நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**
- அனைவரும் கலந்து பயன் பெற அழைக்கிறோம். முன் ஏற்பாடு செய்வதற்கு முன்பதிவு அவசியம்.
- முன்பதிவுக்கு இறுதி நாள் 20.12.2016 ( 100 நபர்கள் மட்டும் கலந்து கொள்ள வாய்ப்புள்ளதால் முன்பதிவு செய்தவர்கள் இறுதிநேரத்தில் வர வாய்ப்பில்லை என்றால் அதனை உடனடியாக தெரிவிக்க வேண்டுகிறோம். இது மற்றவர்களுக்குக் கலந்து கொள்ள வாய்ப்பளிக்க வசதியாக இருக்கும்).

**முன்பதிவிற்கு**

உங்கள் பெயர், ஊர், செல் நெம்பரோடு சேலம் ஞானமுகாம் என 9994205880 (அ) 9789165555 என்ற எண்ணுக்கு SMS செய்யவும்.

மேலும் விபரங்களுக்கு

திரு. Dr. N. **கைலாசம் : 94432 90559** திரு. V.A.P. **சரவணன் : 99942 05880**
திரு. **ஸ்ரீ சதானந்தா : 77082 74444** திரு. K.S. **ஜீவமணி : 9789 165555**

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–**
**ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத்தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை **92620 61838** என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.


Face with Tears of Joy


Loudly Crying Face


Sleepy Face


Disappointed but Relieved Face


Face with Open Mouth and Cold Sweat


Smiling Face with Open Mouth and Cold Sweat


Smiling Face with Sunglasses



Sleeping Face


Face with Cold Sweat


Weary Face


Tired Face


Fearful Face


Face Screaming in Fear


Angry Face


Dizzy Face


Astonished Face


Pouting Face


Face with Look of Triumph


Confounded Face


Smiling Face with Open Mouth and Tightly-Closed Eyes


Face Savouring Delicious Food


Face with Medical Mask

# மன இயல்பு மாற வேண்டுமா?



இப்படி ஓர் அன்பர் கேட்டார்:

"நீங்கள் கூறுவது போல் எனக்கு ஞானத் தெளிவு கிடைத்து விட்டது. எனது மன இயக்கமும் விடுதலை பெற்று விட்டது. எனது மன இயல்புகளிலும் ஓரளவு மாற்றத்தைப் பார்க்க முடிகிறது. நமது இயல்புகள் அனைத்தும் முழுமையாக மாற்றம் அடைய வேண்டாமா? நமது மனப் பதிவுகள் எல்லாம் நம்மை விட்டுப் போக வேண்டாமா? அந்த மாற்றம் நமக்கு எப்போது ஏற்படும்?"

இது ஒரு நியாயமான கேள்வி தான். நாம் நம்முடைய மன இயல்புகளிலிருந்தும் விடு படும் போது தான் அது முழுமையான முக்தி என்று யோக சாஸ்திரங்களும் கூறுகின்றன.

"There is no consciousness without content. The content is our consciousness. Freedom from the content is Liberation"- இப்படி ஜே.கிருஷ்ணமூர்த்தியும் கூறுகிறார்.

இவையெல்லாம் என்ன?

இதனைச் சாதிக்க, மீண்டும் நாம் இன்னுமொரு பொறுப்பைச் சுமக்க வேண்டுமா?

நமக்கு என்னென்ன இயல்புகளெல்லாம் இருக்கின்றன?

கோபப்படும் இயல்பு உள்ளது. இதுபோல் வருத்தப்படுதல், பயப்படுதல், ஆசைப்படுதல், வெறுப்படைதல் போன்ற பலவிதமான இயல்புகள் உள்ளன. அதே சமயம் மகிழ்வடைதல், அன்பு காட்டுதல், தன்னம்பிக்கை, அமைதி போன்ற நல்லியல்புகளும் நம்மிடத்தில் உள்ளன.

இவை அனைத்தும் மாறி விட வேண்டுமா?

இல்லாமல் போய் விட வேண்டுமா?

எந்த இயல்புகளுமே இருக்கக் கூடாதா?

நமக்கு வேண்டிய ஒருவரைச் சந்திக்கிறோம். நமக்கு மகிழ்ச்சி வெளிப்படுகிறது. மகிழ்ச்சி வெளிப்படும் போது மற்ற இயல்புகளெல்லாம் என்ன ஆயின?

அவையெல்லாம் இல்லாமல் போய் விட்டனவா?

அது போல் நமக்கு வேண்டாத ஒருவரைச் சந்திக்கிறோம். நமக்கு வெறுப்புணர்வு வெளிப்படுகிறது.

இப்போது நம்முடைய இயல்பில் உள்ள அன்பு, மகிழ்ச்சி, அமைதி ஆகியவை என்ன ஆயின?

அவை இல்லாமல் போய் விட்டனவா?

நாம் நமக்கு வேண்டியவரைச் சந்திக்கும்போது நம்முடைய நேர்மறை மற்றும் எதிர்மறை இயல்புகள் அனைத்தும் மொத்தமாக வெளிப்பட்டால் என்ன ஆகும்?

ஆனால் அப்படி எப்போதாவது வெளிப்பட்டது உண்டா?

அது சாத்தியமே இல்லை.

நாம் எதிர்கொள்ளும் நிகழ்வுக்குத் தேவையான இயல்பு தான் நம்மிடமிருந்து வெளிப்படுகின்றது.

நண்பரைப் பார்க்கும் போது கோபம், வெறுப்பு போன்றவை வெளிப்படுவதில்லை.

அதுபோல் நம் எதிரியைப் பார்க்கும் போது அன்போ, மகிழ்ச்சியோ வெளிப்படுவதில்லை.

நேர்மறை உணர்வுகளான அன்பு, மகிழ்ச்சி போன்ற பிரச்சினை இல்லாத உணர்வுகளை விட்டு விடுவோம்.

பிரச்சினையான உணர்வுகளான கோபம், பயம், வருத்தம் போன்ற எதிர்மறை உணர்வுகளை எடுத்துக் கொள்வோம்.

அவை எப்படிச் செயல்படுகின்றன?

நாம் ஓர் அலுவலகத்தில் ஊழியராக வேலை பார்க்கிறோம். நமது சக ஊழியர் ஒருவர் நம்மிடம் தவறான வார்த்தைகள் கூறி நம்மைச் சீண்டுகிறார்.

நமக்குக் கோபம் வருகிறது. அது எந்த அளவுக்கு வருகிறது?

அவரைப் பதிலுக்குத் திட்டும் அளவுக்கு வருகிறது. முழுக் கோபத்தையும் நாம் காட்டவில்லை. பாதியளவு தான் காட்டியுள்ளோம்.

நமது சக ஊழியர் நடந்து கொண்டது போல் நமது மேல் அதிகாரியும் நம்மிடம் நடந்து கொள்வதாக வைத்துக் கொள்வோம்.

அப்போதும் நமக்குக் கோபம் வருகிறது. ஆனால் நம் சக ஊழியரிடம் காட்டியதை விட மிகவும் குறைவாக வருகிறது. அதனால் அதனை வெளிக்காட்ட வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விடுகிறது.

நமது சக ஊழியர் நடந்து கொண்டது போல், நமக்குக் கீழே வேலை பார்ப்பவர் நடந்து கொள்வதாக வைத்துக் கொள்வோம். இப்போதும் நமக்குக் கோபம் வருகிறது.

இப்போது நமக்கு ஏற்படும் கோபம் நமது சக ஊழியரின் மீது ஏற்பட்ட கோபத்தை விட அதிகமாகவே உள்ளது.

நாம் அதிகமான கோபத்தை வெளியே காட்டி நமக்குக் கீழே வேலை பார்ப்பவரை உண்டு இல்லையென ஆக்கி விடுகிறோம்.

ஏனெனில் அவரை நம் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள வேண்டியது நமது கடமையாகவும் அவசியமாகவும் உள்ளது.

இந்த மூன்று சந்தர்ப்பங்களிலும்–

கோபப் படும் நமது இயல்பு ஒரே மாதிரியாக வெளிப்படாமல் தேவைக்கேற்ப வெளிப்பட்டுள்ளது.

இப்படி வேறுபட்ட தன்மையில் வெளிப்படுவதற்கு எது காரணம்?

நம்முடைய இயல்பு தான் காரணமா?

இயல்பு தான் காரணமென்றால் அது எப்போதும் ஒரே தன்மையில் வெளிப்பட வேண்டும்.

வெளிப்பாட்டுக்கான காரணம் வேறு இடத்தில் உள்ளது.

ஒரு முறை இன்னுமொரு அன்பர் தனக்கேற்படும் அனுபவத்தை விவரித்து அது சம்பந்தமான கேள்வியை எழுப்பினார்.

அவரது கூற்று இதுதான்:

"எவராவது என்னைச் சீண்டினால் நான் அவர் மீது கோபப்பட மாட்டேன். அவரைப் பார்த்து சிரித்துக் கொள்வேன். ஆனால் அவர் மீதுள்ள கோபம் எனக்குள் ஒரு அடுக்காகப் பதிந்து கொள்ளும்...

"அவர் மீண்டும் என்னைச் சீண்டும் போது அவரிடம் சாந்தமாகவே உரையாடி அவரை நெறிப் படுத்த முயல்வேன். அப்போது அவர் மீதுள்ள கோபம் எனக்குள் இரண்டாவது அடுக்காகப் பதிந்து விடும்."

இந்நிலையில் அவர் மீண்டும் என்னைச் சீண்டினார் என வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் நான் சேமித்து வைத்திருந்த கோபமெல்லாம் பீரிட்டு வெடித்து விடும். நானும் அவர்மீது கண் மண் தெரியாமல் கோபத்தைக் காட்டி விடுவேன்.

இப்படித் தான் எல்லோரும் அடுக்கடுக்காக கோபத்தைச் சேமித்து வைத்து பிறகு அதன் எடை தாங்காமல் தான் கோபத்தால் வெடித்துச் சிதறி விடுகிறார்களா?

அவர் என்ன கேட்கிறார் என்பது நமக்குப் புரிகிறதா?

கோபத்தைச் சேமிப்பதாகக் கூறுகிறார். அப்படி நாம் நமது கோபத்தையோ அல்லது பிற உணர்ச்சிகளையோ சேமிக்க முடியுமா?

நாம் நமது நினைவுகளைத் தான் – Memory யைத்தான் சேமிக்க முடியுமே அல்லாது எந்த உணர்ச்சிகளையும் சேமிக்க முடியாது.

**நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தும் கண்ணாடியில் தோன்றும் பிரதிபலிப்புத் தோற்றம் போன்றதே.**

நீங்கள் கண்ணாடியின் முன்பு நின்று சிரிக்கிறீர்கள்.

உங்களுடைய முகம் சிரித்தவாறு கண்ணாடியில் தோன்றுவது மிகவும் அழகாக உள்ளது.

நீ அப்படியே இரு; சிரிப்பை விட்டு விடாதே என்று நீங்கள் அந்த நிழல் உருவத்திடம் கூறினால் அது கேட்குமா?

**பிரதிபலிப்பு உருவத்துக்கு சுயமாகச் செயல்படும் தகுதி கிடையாது.**

**என்ன என்ன எதிர்ப்படுகிறதோ அதனை அப்படியே பிரதிபலிப்பது மட்டுமே அதனுடைய வேலை.**

நல்ல உருவம் என பிடித்து வைப்பதோ, மோசமான உருவம் என பிரதிபலிக்காமல் விரட்டுவதோ கண்ணாடிக்குச் சாத்தியமில்லை.

**இதுபோல் எந்த மன உணர்ச்சிகளையும் நம்மால் சேமித்து வைக்க முடியாது.**

ஒருவர் நம்மைச் சீண்டும் போது நாம் இவரிடம் கோபப்பட வேண்டாம் என முடிவெடுக்கிறோம். அதனால் தான் கோபத்தைக் காட்டாமல் அவரிடம் புன் முறுவலைக் காட்டுகின்றோம்.

இரண்டாம் முறை சீண்டும் போதும் நாம் கோபப்பட வேண்டாமென்ற முடிவை எடுக்கின்றோம். ஆனால் அவரை எச்சரிக்கை செய்வது அவசியம் என முடிவெடுத்ததால் எச்சரிக்கை செய்கிறோம்.

மூன்றாம் முறை சீண்டும் போது நாம் கோபப்படுவது தான் சரியானது என்று முடிவெடுக்கின்றோம். இரண்டு வாய்ப்புகளையும் அவர் பயன்படுத்தாத காரணத்தால் அதனுடைய பலனை அவர் அனுபவத்தே தீர வேண்டும் என்று முடிவெடுக்கின்றோம்.

எந்த அளவுக்கான கோபம் தேவை என்ற முடிவுக்கு ஏற்ற வகையில் நம் உணர்ச்சி-கோபம் வெளிப்படுகின்றது.

இப்படி முடிவெடுப்பது எது?

நம்முடைய இயல்புகளா?

நம் இயல்புக்கும் அறிவுக்கும் நேரடித் தொடர்பு கிடையாது. ஆகவே நமது இயல்புகளால் எந்த முடிவையும் எடுக்க முடியாது.

நம் அறிவு தான் முடிவை எடுக்கிறது. அந்த முடிவுக்கேற்ற உணர்ச்சிகள் நம் இயல்பிலிருந்து வெளிப் படுகின்றன.

ரோட்டில் சைக்கிள் ஓடுவதைப் பார்த்திருக்கிறோம். அதுபோல் சில கண்டெய்னர் லாரிகள்-இமயமலையைப் போல் இருக்கும்-ரோட்டில் ஓடுவதையும் பார்த்திருக்கிறோம்.

இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எறும்பையும் யானையையும் ஒப்பிட்டுப் பார்த்ததைப் போல் இருக்கும்.

நம்முடைய இயல்புகள் மலை மலையாக இருக்கலாம். அவற்றையெல்லாம் நாம் சீரமைக்கத் தேவையில்லை.

அவற்றை நிர்வகிக்கும் நம்முடைய அறிவை பயன்படுத்தத் தெரிந்தால் போதும்.

யோக சாதனைகள் மூலம் சில உணர்ச்சிகள் ஏற்படாமலேயே செய்து விட முடியும். ஆனால் அது நம்மை முடமாக்கும் முயற்சியே.

நம்முடைய அனைத்து இயல்புகளும் தேவையானவையே. அவற்றை யோக சக்தியினால் அடக்கத் தேவையில்லை. அறிவினால் நிர்வாகம் செய்தால் மட்டும் போதும்.

கலியுகத்தை நெறிப்படுத்த எத்தனையோ அடக்குமுறைகள் தேவைப்படலாம்.

ஆனால் நாம் அனைவரும் ஞானயுகத்தினுள் அடியெடுத்து வைத்து விட்டோம். இங்கு நம்முடைய மிகச் சாதாரண அறிவு மட்டும் போதுமானது.

நம்முடைய இயல்புகள் மலை மலையாக இருக்கலாம். அவற்றையெல்லாம் நாம் சீரமைக்கத் தேவையில்லை. அவற்றை நிர்வகிக்கும் நம்முடைய அறிவை பயன்படுத்தத் தெரிந்தால் போதும். யோக சாதனைகள் மூலம் சில உணர்ச்சிகள் ஏற்படாமலேயே செய்து விட முடியும். ஆனால் அது நம்மை முடமாக்கும் முயற்சியே. நம்முடைய அனைத்து இயல்புகளும் தேவையானவையே. அவற்றை யோக சக்தியினால் அடக்கத் தேவையில்லை. அறிவினால் நிர்வாகம் செய்தால் மட்டும் போதும்.

ஆனால் இரண்டுக்கும் ஸ்டீயரிங் ஒன்று தான். ஸ்டீயரிங்கை வளைக்கும் திசையை நோக்கி-அது இமயமலை வாகனமாயினும் சரி அல்லது எறும்பைப் போன்ற சைக்கிளாயினும் சரி – எளிதாகச் சென்று விடும்.

அதுபோல் நமது அறிவு என்ன முடிவெடுக்கிறதோ – எப்படித் தீர்மானிக்கிறதோ அதற்கேற்ற உணர்ச்சியே ஏற்படுகின்றது.

– தேவைக் கேற்ப ஏற்படுகிறது.

நமது காரில் முழு டாங்க் அளவுக்கு பெட்ரோல் நிரப்பி இருந்தாலும் சரி,

எந்த அளவுக்கு ஆக்ஸிலேட்டரை அழுத்துகிறோமோ அதற்கேற்ற வேகத்தில் தான் வண்டி நகரும்.

உணர்ச்சிகளின் தேவையையும் அளவையும் நிர்ணயிப்பது நம்முடைய அறிவு மட்டுமே.

நம்முடைய அறிவென்பது நமது அடி மனதிலோ, ஆழ் மனதிலோ கிடையாது.

அது மிகவும் வெளிப்படையான வெளி மனதிலேயே-Conscious Mind லேயே உள்ளது.

வெளி மனது என்பது நம் கைவசமே உள்ளது.

ஸ்டீயரிங்கும், ஆக்ஸிலேட்டரும் நம் கைவசமே உள்ளன.

நமது கைகளை மேசையின் மீது பரப்பி வைத்து அதன் மீது ஐம்பது கிலோ எடையுள்ள பெட்டியை வைத்தால் நமது கைகள் நசுங்கி விடும். ஐம்பது கிலோவைத் தாங்கும் சக்தி நமது கைகளுக்குக் கிடையாது.

அதே நேரம் ஐம்பது கிலோ எடையுள்ள பெட்டி தரையில் இருக்கிறது. அதைத் தூக்கி வேறு இடத்தில் வைக்க வேண்டியுள்ளது. அப்படி அதனைத் தூக்க வேண்டும் என நாம் முடிவெடுத்தால் அதனைத் தூக்கும் ஆற்றல் நமது கைகளுக்கு வந்து விடுகின்றது.

தூக்கி முடித்ததும் அந்த சக்தியும் நமது கைகளை விட்டுப் போய் விடுகின்றது.

நாம் சந்திக்கும் சூழ்நிலையை நாம் எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்று நம் அறிவு முடிவு செய்கிறதோ

அதற்குத் தகுந்த உணர்ச்சிகளே நம்மிடம் வெளிப்படுகின்றது.

– அது கோபமாக இருக்கலாம் அல்லது அன்பாக இருக்கலாம்.

நமது அறிவை அறிவுப் பூர்வமாக உபயோகிப்பது தான்

– நமது இயல்புகளை வெற்றி கொள்வதாகும்; மாற்றியமைப்பதாகும்.

★



# கேள்வி? பதில்...

## தீய பழக்கத்திலிருந்து முழுவதும் விடுபட முடியுமா?

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:** நான் பகவத் ஐயாவின் நூல்களைப் படித்து நன்றாக இருக்கிறேன். அதன் விளைவாக என்னுடைய வாழ்க்கையில் எத்தனையோ தீய பழக்கத்திலிருந்தும், மன அழுத்தத்திலிருந்தும் விடுதலை அடைந்திருக்கிறேன். ஆனால் இன்னும் ஒரு சில தீய பழக்கங்களிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கிறேன். அதிலிருந்தும் விடுபட்டால் இன்னும் நன்றாக இருப்பேன் என்று நினைக்கிறேன். அப்படி நான் மாற்றமடைவதற்கு இன்னும் என்ன செய்ய வேண்டும்? என் மனம் நிறைவாக இருப்பதை நான் எப்படி உணர்வது?

**பதில் :** நாம் இந்தப் புரிதலுக்கு வருவதற்கு முன்பாக நமது பழக்கங்கள், மன அழுத்தங்கள் போன்றவை நம்மை விட்டு நீங்குவதற்காக மனோரீதியாக எத்தனையோ தியானப் பயிற்சிகள், முயற்சிகள் என மேற்கொண்டு வந்தோம். ஆனாலும் நமக்கு எந்த மாற்றமும் ஏற்படவில்லை, பழக்கமும், மன அழுத்தமும் மனதளவில் மேலும் வலிமை அடைந்ததே தவிர அதன் தாக்கம் கொஞ்சமும் குறைந்தது போல் தெரியவில்லை. நாமும் சலித்துப் போகிறோம். எத்தனையோ பயிற்சிகளை மாற்றி மாற்றி செய்து பார்க்கிறோம். நம்மிடம் எந்த மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. மன வேதனை மட்டுமே எஞ்சி இருப்பதாகத் தெரிகிறது.

இந்த நிலையில் தான் மனதிற்கு எந்தப் பயிற்சியும், முயற்சியும் தேவையில்லை என்ற பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புதிய அணுகு முறையை நாம் முதன் முதலாக அறிவுப் பூர்வமாக புரிந்து கொள்கிறோம். அந்தப் புரிதல் என்பது மனதில் தாமாக வெளிப்படுவதை நம்மால் நிச்சயமாக ஒருபோதும் மாற்றவே முடியாது. அது தாமாக தோன்றி மறைவது. அப்படி தாமாகச் செயல்படும் மனம் நம் எல்லைக்குக் கட்டுப்படாத ஒன்று என்பதை அறிவுப் பூர்வமாகப் புரிந்து கொள்கிறோம். நாம் இது வரை மனோரீதியாக எடுத்து வந்த பயிற்சி, முயற்சிகளைக் கை விடுகிறோம். முயற்சியைக் கை விடுவதின் விளைவாக நம் அகப் போராட்டம் முடிவுக்கு வந்து விடுகிறது. அந்தத் தேவையற்ற பழக்கத்திலிருந்தும், மன அழுத்தத்திலிருந்தும் தாமாகவே விடுதலை அடைகிறோம். பிறகு மற்றவர்கள் இது சம்பந்தமாக பேசும் போதோ, இது சம்பந்தமாக செய்திகளை படிக்கும் போதோ தான் நமக்கு தெரிய வருகிறது இதிலிருந்து விடுபட்டு இருக்கிறோம் என்பது.

ஆனாலும் ஒரு சில விசயங்களில் நம்மையும் மீறி சில நேரங்களில் மனதளவில் விடுபடமுடியாமல் ஈடுபட்டுவிடுகிறோம். இதிலிருந்தும் எவ்வாறு விடுபடுவது என்பது தான் உங்கள் கேள்வியாக இருக்கிறது. நம்மையும் மீறி நம் பழக்கத்தில் ஈடுபடுவதும் நம் கட்டுப்பாட்டில் கிடையாது என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இங்கு மனத் தோல்வியை ஏற்பதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை என்ற நம்முடைய இயலாமையை புரிந்து கொள்கிறோம். இதனால் அந்தப் பழக்கம், மன அழுத்தம் சம்பந்தமாக நேர்முகமாக, மறைமுகமாக என எந்த வகையிலும் எதிர்ப்பதிலிருந்து விடுபடுகிறோம். அத்தோடு நமது வேலையே முடிந்து விடுகிறது. இப்படியே நாட்கள், சில மாதங்கள் நகர்கின்றன. நமக்குத் தெரியாமலேயே அந்த தீயபழக்கத்திலிருந்தும் மன அழுத்தத்திலிருந்தும் விடுபட்டு விடுவோம்.

நம்மால் ஒருபோதும் மனோரீதியாக எதிர்த்து மனஅழுத்தத்திலிருந்தும், பழக்கத்திலிருந்தும் விடுபடவோ, வெற்றி கொள்ளவோ முடியாது என்ற நமது இயலாமை எனும் தோல்வியை அறிவுப் பூர்வமாகப் புரிந்து கொள்வதோடு நமது வேலை முடிந்து விடுகிறது. பிறகு மாற்றம் என்பது தாமாக ஏற்படுகிறது. மனதில் மாற்றம் ஏற்பட வேண்டும் என்பதற்காக நாம் இந்தத் தோல்வியை ஏற்கவில்லை. தோல்வியை ஏற்பதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை என்பதால் தான் நாம் தோல்வியை ஏற்றுக் கொள்கிறோம். இது நமது முயற்சியினாலும், விருப்பத்தினாலும் ஏற்பட்ட ஒன்று கிடையாது. மாற்றம் என்பது தாமாக நிகழ்வது.

"ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்." ஒரு சோறு பதத்தைக் கொண்டு தான் பானையில் இருக்கும் எல்லாச் சோறும் பதமடைந்திருக்கிறது என்பதை உறுதிப் படுத்திக் கொள்கிறோம். அதுபோல் நம்மிடம் இருக்கும் பல மோசமான பழக்கம், மன அழுத்தம் போன்றவற்றிற்கு, எப்படி நமது மனதின் இயலாமையைப் புரிந்து கொள்வது தீர்வாக அமைந்ததோ, அதே அடிப்படையில் தான் எஞ்சிய பழக்கமும் மன அழுத்தமும் தீர்வடைய முடியும். மனதை எதிர்த்துச் செயல்படுவது தேவையற்றது என்பது ஒன்று தான் தீர்வு. அது சின்ன விசயமாக இருக்கலாம், பெரிய விசயமாக இருக்கலாம். எல்லாவற்றிற்கும் ஒரே வழிமுறை தான். பெரிய விசயம் என்பதற்காக வேறு எந்தச் சிறப்பான வழிமுறையும் கிடையாது. இருப்பது ஒரே ஒரு தீர்வு தான்.

ஞான விடுதலை நூலில் குறிப்பிட்டுள்ள உதாரணத்தைச் சிந்திப்போம். 40 பெட்டிகள் கொண்ட இரயில் இரண்டாவது தண்டவாளத்திலிருந்து முதல் தண்டவாளத்திற்கு மாறி இரயில் நிலையத்தின் நிற்கும் இடத்திற்கு வருவதை இரயில் பயணிக்கும் நாம் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம்.

இரயிலின் என்ஜின் தான் முதன்மையாக இருக்கும். என்ஜின் இரண்டாம் தண்டவாளத்திலிருந்து முதல் தண்டவாளத்திற்கு மாறிய பிறகு மற்ற பெட்டிகளும் என்ஜினைப் பின் தொடர்ந்து முதல் தண்டவாளத்திற்கு வந்து விடும். ஏதோ சிக்னல் காரணமாக இரயில் என்ஜினுடன் 10 பெட்டிகள் முதல் தண்டவாளத்திலும், மீதமுள்ள பெட்டிகள் இரண்டாவது தண்டவாளத்திலும் இருப்பதை நாம் பார்க்கிறோம். என்ஜின் சிக்னல் கிடைத்து நகரத் தொடங்கிய பிறகு இரண்டாவது தண்டவாளத்திலிருக்கும் 30 பெட்டிகளும் என்ஜினைத் தொடர்ந்து வந்து சேரும். இரண்டாவது தண்டவாளத்திலிருந்த 30 பெட்டிகளும் முதல் தண்டவாளத்திற்குத் திரும்புவதற்காக என்ஜின் தனியாக சிறப்பாக எந்த வேலையும் செய்வதில்லை. என்ஜின் தன்னுடைய வழக்கமான வேலையை செய்யும் போதே தானாகவே 40 பெட்டிகளும் வந்து சேர்ந்துவிடும்.

என்ஜின் ஒன்று மட்டும் புதிய பாதைக்கு மாறி விட்டால் அதனைத் தொடர்ந்து மற்ற பெட்டிகளும் தாமாக புதிய பாதைக்கு மாறி விடும்.

**நமது இயலாமையைப் புரிந்து கொண்டால் மட்டும் போதும், நமது தேவையற்ற பழக்கமும், மன அழுத்தமும் தாமாக மாறிவிடும்.**

நம்மிடம் பல அடுக்குகளாகப் பழக்கங்களும், மன அழுத்தங்களும் பதிவாகி உள்ளன. ஒரு பழக்கம் ஒரு வாரம், ஒரு மாதம், ஒரு வருடம் எனப் பழக்கத்தின் பதிவுக்குத் தகுந்தாற் போல் மனதில் அழுத்த வேறுபாட்டுடன் பதிந்திருக்கும். ஒரு வாரப் பழக்கம் சில நாட்களிலும், ஒரு மாத பழக்கம் சில வாரங்களிலும், ஒரு வருடப் பழக்கம் சில மாதங்களிலும் மாற்றமடையும். குறைவான பழக்கம் விரைவாகவும் அதனை பின் தொடர்ந்து அடுத்த அடுத்த நிலையில் உள்ள பழக்கமும் அழுத்தமும் மாறிக்கொண்டே வரும். ஒரு வார பழக்கத்திற்கு என்ன வழிமுறையோ அதே வழிமுறை தான் ஒரு வருடப் பழக்கத்திற்கும். ஒரு வருடப் பழக்கம் என்பதற்காகத் தனியாக எந்தச் சிறப்பான வழி முறையும் கிடையாது.

நான் இப்போது இருப்பதை விட இன்னும் கொஞ்சம் மாற வேண்டும் என்ற எதிர்பார்ப்பு தான் அந்த பழக்கம் மாற்றமடையாமல் இருப்பதற்குத் தடையாக இருக்கிறது. என்ஜினைத் தொடர்ந்து 40 பெட்டிகளும் நிச்சயமாக வந்து சேரும். நாம் புரிதலில் மட்டும் உறுதியாக இருந்து விட்டால் போதும். வேறு எதுவும் தனியாக செய்யத் தேவையில்லை. அத்தோடு நமது வேலையே முடிந்து விடுகிறது. அகத்தில் நமது பழக்கம், மன அழுத்தம் சம்பந்தமாக எந்த முயற்சியும் தேவையில்லை.

மாற வேண்டியவை அனைத்தும் தாமாகவே மாறிவிடும். நம்மைப் பாதித்திருந்த அனைத்தும் விட்டு விடுதலையாகும். நமக்குத் தெரிந்து நேரடியாக எந்த மாற்றத்தையும் உணர முடியாது. நமக்குத் தெரியாமல் தான் மாற்றம் என்பது ஏற்பட முடியும், மனநிறைவு உட்பட.

**மனதை எதிர்த்துச் செயல்படாமல் புரிதலில் உறுதியாக இருப்போம்.**





# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்,

பல காலப் பயிற்சி, தியானங்களில் கிடைக்காத ஞானமும் விடுதலையும் ஸ்ரீபகவத் ஐயா வழங்கும் மனதைப் பற்றிய எளிதான புரிதலின் மூலம் கிடைத்து விடுகிறது. பல காலம் புதிராக இருந்த ஞானம் பகவத் ஐயாவால் விடுவிக்கப்பட்டு பாமரர்களும் ஞானம் பெறும் வண்ணம் எளிதாகிவிட்டது. ஞானம் எளிதாயினும் இதனால் ஏற்படும் விடுதலை எல்லையற்றதாக இருக்கிறது. இந்த விடுதலை தான் ஆன்மிக வாழ்வில் மிக உயர்ந்த நிலையாக கருதப்படுகிறது. உண்மையில் உலகியல் வாழ்க்கை வாழும் அனைவருக்குமே இது தேவையான ஒன்று.

இந்த விடுதலைக்குப் பிறகே நமது வாழ்வு ஒரு முழுமையான வாழ்வாக அமைகிறது.

இந்த உயர்ந்த விடுதலையைத் தரக்கூடிய ஞானத்தைத் தான் பகவத் ஐயா அவர்கள் புரிதலாக வழங்கி வருகிறார்கள்.

ஓர் உண்மையை ஐயம்திரிபற புரிந்து கொள்வது என்பது ஒன்று. வெறும் கருத்தாக மட்டும் மனதில் பதிய வைத்துக் கொள்வது என்பது மற்றொன்று.

வெறும் கருத்தாக மட்டும் வைத்திருந்தால் அது நமக்கு சொந்தமானதாக இருக்காது. நாம் சேகரித்து வைத்த ஒரு கருத்தாக மட்டுமே மனதில் பதிந்திருக்கும். அதனால் நமக்குப் பயனேதும் இருக்காது.

ஆனால் ஓர் உண்மையைப் புரிந்து கொள்வது என்பது அவ்வாறு அல்ல. நாம் அதை ஐயமின்றி புரிந்து கொள்ளும் போது அது நமக்கே சொந்தமானதாகி விடுகிறது. அதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற அவசியம் கூட இல்லை. அது நம்மோடு ஒன்றாகக் கலந்து விடுகிறது. அப்படிப் புரிதலால் பெறப்படும் ஞானமே நமதாகி நமக்குத் தேவைப்படும் போதெல்லாம் சுய ஒளியாக இருந்து வழி காட்டுகிறது.

ஸ்ரீபகவத் ஐயா வழங்கும் ஞானத்தைப் புரிதலாகப் பெறாமல் வெறும் கருத்தாக மட்டும் வைத்திருப்பவர்கள் சிலர் நம்மிடம் பின்வருமாறு கேட்பதுண்டு:

"பகவத் ஐயா கூறுவது போல், என் மனதில் ஏற்படும் பிரச்சினைகளையும் துன்ப உணர்ச்சிகளையும் நான் அப்படியே பிரவாகத்தில் போக விட்டு விடுகிறேன். சாதாரண பிரச்சினைகள் என்னை விட்டு எளிதாகப் போய் விடுகின்றன. ஆனால் என்னை மிகவும் பாதிக்கும் பிரச்சினைகளும் துன்ப உணர்ச்சிகளும் நான் பிரவாகத்தில் விட்டாலும் அவ்வளவு எளிதாக என்னை விட்டுப் போவதில்லை. எனக்கு துன்பத்தையேத் தருகின்றன. இதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

இவர்கள், "பிரவாகத்தில் விட்டு விடுகிறேன்" என்று சொல்வதைப் பார்த்தால், ஆற்றங்கரையில் அமர்ந்து கொண்டு ஆற்று வெள்ளத்தில் காகிதக் கப்பலைச் செய்து விடுவதை போல் நினைத்துக் கொண்டு முயற்சி செய்கிறார்கள் என்று தெரிகிறது.

இங்கு பாதிக்கும் அனுபவம் ஒன்று, பாதிக்கும் அனுபவத்தைப் பிரவாகத்தில் விட முயற்சிப்பவன் என்று மற்றொன்று என இருமைத் தன்மை வந்துவிடுகிறது. இருமைத் தன்மை இருக்கும் வரை போராட்டத்திற்கு முடிவு கிடையாது. பிரச்சினையை பிரவாகத்தில் விடுபவன் என்று ஒருவன் இருக்கும் வரை பிரச்சினைக்குத் தீர்வும் கிடைக்காது. அகத்தைப் பொருத்த வரையில் அனுபவம், அனுபவிப்பவன் என்ற பாகுபாடு கிடையாது. அனைத்தும் அனுபவமே.

உண்மையில் அனைத்து உணர்வுகளும், அனுபவங்களும் நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கு ஏற்றவாறும் இயல்புக்கு ஏற்றவாறும் பிரவாகமாகத் தோன்றி மறைந்து கொண்டு இருக்கின்றன. பிரவாகத்தில் விடுவது என்பது நமது செயல் அல்ல, தோன்றி மறைவது என்பது எப்போதும் தாமாக நிகழ்ந்து கொண்டு இருக்கக் கூடிய உண்மை. இந்த உண்மையை அறிவு புரிந்து கொண்டால் மட்டுமே அதனோடு முரண்படாமல் இருக்கும்.

நமது அனுபவங்கள் அனைத்தும் பிரவாகமாக செல்வதை கரையில் அமர்ந்து கவனிக்கும் நபர் அல்ல **"நான்"**. ஆற்றின் பிரவாகப் பயணத்தில் பயணிக்கும் வெள்ளத்தின் ஒரு துளியே **"நான்"**.

இங்கு செயல் என்பதே முரண்பாடுதான். செயலற்று இருப்பதே இயற்கையான பிரவாக இயக்கத்தில் தடையில்லாமல் இருப்பதாகும். இது புரிதலின் மூலமே சாத்தியம்.

உதாரணமாக 4+4=8 என்ற கணிதத்தை புரிந்து கொள்வதுதான் சரி. இதைப் புரிந்து கொள்ளாமல் ஒரு கருத்தாக பதிய வைத்துக்கொண்டால், பிறகு 5+3=8 என்ற கணக்கையும் மீண்டும் ஒரு கருத்தாக பதிய வைக்க வேண்டிய அவசியம் ஏற்படும். கணிதத்தை புரிந்துகொள்வதுதான் சரி. அப்போதுதான் எந்த கோணத்தில் அணுகினாலும் விடை கிடைக்கும்.

இதுபோலத்தான் மனதின் இயக்க உண்மையைப் புரிந்து கொண்டால் மட்டுமே எந்த அனுபவத்தோடும் முரண்படாமல், அதன் பிரவாக இயக்கத்தில் தடையின்றி பிரவகிப்போம். இதுவே விடுதலை.

இந்த விடுதலையைக் கொடுக்கக் கூடிய ஞானத்தைத்தான் ஸ்ரீபகவத் ஐயா தனது சத்சங்கங்களின் மூலமாகவும் ஞான முகாம்களின் மூலமாகவும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில்

வழங்கிக் கொண்டு வருகிறார்கள்.

அந்த வகையில் சென்ற நவம்பர் மாதம் 24ஆம் தேதி கரூரில் ஐயாவின் சத்சங்கமும் 25ஆம் தேதியிலிருந்து 27ஆம் தேதி வரை நெரூரில் ஓர் ஞானமுகாமும் நடைபெற்றது. இதில் பல புதிய அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

இந்த ஞான முகாம் நிகழ்ச்சியில் "Vedanta" எனும் புதிய ஆங்கில நூல் வெளியிடப்பட்டது. இது வேத சாஸ்திரங்களை ஆதி முதல் அந்தம் வரை எளிமையாக எடுத்துச் சொல்லி ஞானத்தைப் புரிய வைக்கும் அருமையான நூல். ஞான முகாமில் கலந்து கொண்ட அனைவரும் இந்நூலை வாங்கிப் பயன் பெற தொடங்கினர்.

இந்நிகழ்ச்சிகளை மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்த ஸ்ரீ பகவத் மிஷன், கரூர் மையத் தலைவர் திரு.இராஜகோபால், திரு.கோவி.ரவி, ஆசிரியர், திரு.சிவகுரு, திரு.பாலசுப்ரமணியம் மற்றும் டாக்டர்.சுவாமிநாதன் ஆகிய அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் பாராட்டுகளையும் நன்றிகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் சேலம் ஸ்ரீபகவத் பவனில் டிசம்பர் 30ஆம் தேதி முதல் ஜனவரி 1ஆம் தேதிவரை ஞானமுகாம் நடைபெற உள்ளது. அனைவரும் கலந்து பயன் பெற அழைக்கிறோம்.

தெளிவு பெறுவோம்... மற்றவர்களும் தெளிவு பெற உதவுவோம். நன்றி.

## ஸ்ரீ பகவத் பவன்



நமது ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தில் இதுவரை இரண்டு ஞானமுகாம் கட்டணம் எதுவுமின்றி இலவசமாக நடைபெற்றுள்ளன. மேலும் வருகின்ற டிசம்பர் மாதம் 30ஆம் தேதியிலிருந்து ஜனவரி 1 ஆம் தேதி வரை ஒரு ஞானமுகாம் கட்டணம் எதுவுமின்றி இலவசமாக நடைபெற உள்ளது. நமது பகவத் பவனில் நடைபெறும் அனைத்து ஞானமுகாம்களையும் இலவசமாகவே நடத்த எண்ணியுள்ளோம்.

மனித குலத்தின் ஒட்டுமொத்த துன்பத்தையும் போக்கும் ஞானத் தெளிவை நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞானமுகாம் ஒன்றே வழங்கி வருகிறது. இது அனைவருக்கும் பயனாக அமைய வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் தான் இதனை இலவசமாக நடத்தி வருகிறோம். எனவே தேடுதல் கொண்டவர்கள் அனைவரும் கலந்து கொண்டு பயன் பெறுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

ஞான முகாமிற்கான அனைத்துச் செலவுகளும் நமக்கு வருகின்ற நன்கொடைகள் மூலமே நடைபெற்று வருகிறது. மனிதகுல உயர்வுக்கான இந்த மாபெரும் தொண்டில் வாய்ப்புள்ளவர்கள் நன்கொடைகளை வழங்கி தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் நமது பகவத் பவன் கட்டடப் பணிக்காக பலர் தங்களது பங்களிப்பை வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக (Founders) தங்களை இணைத்துக் கொண்டுள்ளார்கள். இந்தக் கட்டடப் பணி பலரின் பங்களிப்பையும் தாண்டி ரூபாய் இருபது லட்சம் வட்டி இல்லாக் கடனாகவும் பலரிடம் பெறப்பட்டு நிறைவு செய்யப்பட்டுள்ளது. இன்னும் 75 நிறுவனர்கள் (Founders) மட்டுமே தேவைப்படும் இந்நிலையில் தங்களது பங்களிப்பை வழங்கி ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர்களாகத் தங்களை இணைத்துக் கொண்ட

திருமதி. **கிருஷ்ணவேணி,** திருநெல்வேலி.
திரு. **M.சையத் சாஹிர்,** ஆத்தூர்.
திரு. **P.சிவக்குமார்,** ஆத்தூர்.
ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# நிகழ்ச்சி நிழல்கள்



நெரூர் ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்



வேதாந்தா ஆங்கில நூல் வெளியீட்டின் போது



குழந்தையும், குழந்தை உள்ளமும்



வேதாந்தா ஆங்கில நூல் வெளியீட்டின் போது



நெரூர் ஞான முகாமில் வேதாந்தா ஆங்கில நூல் வெளியீட்டின் போது



சென்னை அம்பத்தூர் சத்சங்கத்தில் கலந்து கொண்டவர்கள்

# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு




அன்பிற்கினிய ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூலான **"கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூலின் நான்காம் பதிப்பு தற்போது வெளி வர உள்ளது. இந்த நூல் தேடுதல் கொண்ட அனைவருக்கும் ஞானத் தெளிவைக் கொடுக்கும் வகையில் அமைந்துள்ளதோடு ஆன்மிகம் சாராத அன்பர்களுக்கும் மனோ தத்துவரீதியாக விளக்கங்களை கொடுத்து அவர்களும் பயன் பெறும் வகையில் அமைந்துள்ளது. ஸ்ரீ பகவத் ஐயா இந்த நூலில் ஞானத்தை அறிவியலாக்கி அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கி கொடுத்திருக்கிறார். ஆதலால் இந்த நூலுக்கு கல்வித் துறையில் பாட நூலாக அமையும் தகுதியும் உண்டு. இந்நூல் பாட நூலாக அமைகிறதோ இல்லையோ, தமிழ் படிக்கத் தெரிந்த அனைவரின் கைகளுக்கும் கொண்டு சேர்ப்பதே நம் அனைவரது கடமை. இந்நூலைப் படிப்பவர்கள் அனைவரும் அவர்களது மனக் கவலைகளில் இருந்து விடுபட்டு ஞானத் தெளிவு பெறுவது உறுதி. இந்நூலை இதுவரை ரூபாய் 100/-க்கு விற்பனை செய்து வந்தோம். இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்தில் நன்கொடை விலையாக **(Gift Price Edition) ரூபாய். 50/-க்கு** வெளியிட வேண்டும் என்ற **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் விருப்பத்திற்கு இணங்க **5000 பிரதிகள்** அச்சிட்டு குறைந்த விலையில் வெளியிட எண்ணியுள்ளோம். இந்நூலின் ஆங்கில வடிவான **"Smash Your Sorrows"** நூலையும் பலரின் பங்களிப்பால் **"Gift Price Edition"** ஆக **ரூபாய் 50/-க்கு** அச்சடித்த மதிப்பை விட குறைந்த விலைக்கு வெளியிட்டுள்ளோம். அதுபோலவே,

இந்நூலையும் குறைந்த விலையில் வெளியிட விரும்புகிறோம். வாய்ப்புள்ளவர்கள் நன்கொடை வழங்கி உதவுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இதுவரை நன்கொடை வழங்கியவர்கள்.

1. திரு. **கார்த்திகேயன்,** சிங்கப்பூர், ரூ. 10000/-
2. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை, ரூ. 10000/-
3. திரு. **ஸ்ரீ சதானந்தா - மா.சதானந்தா** தி.கோடு, ரூ. 25000/-
4. திருமதி. **சகுந்தலா,** பாடி, ரூ. 5000/-
5 திரு. **சிவக்குமார்,** வலசரவாக்கம், ரூ. 10000/-
6. திருமதி. **நிருபமா,** கோபாலபுரம், ரூ. 10000/-
7. திரு. **பாண்டி பரமசிவம்,** கேப் மின்ஸ் குரூப், சென்னை, ரூ. 10000/-
8. திரு. **ஜெயராம்,** கனடா, ரூ. 10000/-
9. திரு. **முரளிகண்ணன்,** கோவை, ரூ. 10000/-
10. திரு. **மூர்த்தி** குரு ஊறுகாய், நெல்லை, ரூ. 10000/-
11. திரு.**குணாளன்,** கோவை, ரூ. 10000/-
12. திரு. **மாரிமுத்து,** சென்னை, ரூ. 10000/-
13.திருமதி.**தேவி,** மலேசியா, ரூ. 15000/-
14. திருமதி. **ஹேமா கண்ணன்,** USA, ரூ. 10000/-
15. திரு. B. **ஸ்ரீனிவாசன்** சென்னை., ரூ. 10000/-
16. திரு. **முரளி - பிரபா முரளி** சென்னை., ரூ. 10000/-

இவர்களோடு **பெயர் தெரிவிக்க விரும்பாத நண்பர் ஒருவரும்** தனது பங்களிப்பாக ரூ. 10000/- வழங்கியுள்ளார்கள். இவர்களின் உயர்ந்த பங்களிப்பால் ஐயாவின் ஞானப்புரிதலை தேடுதல் உள்ள பலருக்கும் கொண்டு செல்ல முடிகிறது.

இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூல் வெளியிட மேலும் ரூ. 75000/- தேவைப்படுகிறது.

மேலும் இந்நூல் விரைவில் வெளியிட இருப்பதால் நன்கொடை வழங்க வாய்ப்புள்ளவர்கள் டிசம்பர் 30க்குள் வழங்கி உதவிடுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் விபரங்களுக்கு : 99942 05880, 97891 65555







பக்கங்கள் 496 விலை ரூ. 500/-

## "Vedanta" - ஆங்கில நூல்

ஸ்ரீ பகவத் ஐயாவின் புதிய நூலான **"Vedanta"** என்னும் ஆங்கில நூல் நெரூரில் நடைபெற்ற ஞான முகாமில் வெளியிடப்பட்டது. இந்நூல் "வேதாந்தம்" என்ற தமிழ் நூலின் ஆங்கில வடிவம். இந்நூல் வேத சாஸ்திரங்களின் ஆதி அந்தத்தை எளிமையாக எடுத்துக் கூறி அதன் வழியில் ஞானத் தெளிவை வழங்குகிறது. இந்நூலை அனைவரும் வாங்கி படித்து பயன் பெறும் படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இந்நூல் கிடைக்கும் இடம்.




31, இராமலிங்க சுவாமி தெரு,
அம்மாப்பேட்டை, சேலம் - 636003
செல் : 999420 5880, 97891 65555





## தண்டிக்காத குரு

ஒரு ஜென்குருவிடம் ஞானம் பெறுவதற்காகப் பலர் சீடர்களாக இருந்து வந்தனர். அவர்களில் ஒருவன் நள்ளிரவில் எழுந்து குருகுல மதில் சுவரைத் தாண்டி நேரே விலை மகளிர் கூத்தடிக்கும் இடத்திற்குப் போவதை வழக்கமாக கொண்டிருந்தான்.

மேலும் இது குருவுக்குத் தெரிந்தால் என்னை பற்றி என்ன நினைப்பாரோ என்று வருந்தினான். இருப்பினும் இது தவறு என்று தெரிந்திருந்தும் இதிலிருந்து விடுபட முடியாமல் தடுமாறி வந்தான். குரு ஒரு நாள் இரவு நேரத்தில் குருகுல வளாகத்திலுள்ள சீடர்கள் தங்குமிடத்தைப் பார்வையிட வந்தார். அப்படிப் பார்வையிட்டதில் அந்த ஒரு சீடனின் படுக்கை மட்டும் காலியாக இருந்தது. குருகுலத்தைச் சுற்றி வரும் போது சுவரின் அருகே ஒரு முக்காலி இருந்தது. இந்த முக்காலியின் மேலேறி சுவரைத் தாண்டிப்போவான் அந்த சீடன். முக்காலியை எடுத்துவிட்டு அந்த இடத்தில் குரு நின்றார்.

வெளியே போன சீடன் சுவரேறி, தன் குருவின் தலை மேல் கால் வைத்து, குருகுலத்துக்குள் குதித்தான். பின்பு அது முக்காலி அல்ல தன் குருவின் தலை என்று அறிந்ததும் அதிர்ந்துபோனான்.

குரு சொன்னார், “விடியற்காலையில் பனி அதிகம், குளிர் அதிகம். அதனால் சளி பிடித்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள். கவனம் இருக்கட்டும்.”

அன்றிலிருந்து அந்தச் சீடன் அந்த நேரத்தில் வெளியில் போவதே கிடையாது.

**மனதிற்குக் கட்டுப்பாடுகளை விதித்து அதன் விருப்பங்களை அடக்க முடியாது,**

**அதன் சுதந்திர இயக்கத்தோடு முரண்படாமல் இருந்தாலே போதும்**

**விருப்பங்கள் தேவையில்லாமல் போய்விடும்.** ★



## அறிவிப்பு

அனைவருக்கும் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புகைப்படங்கள் அனைத்தையும் தற்போதிலிருந்து சேகரிக்கத் தொடங்கியுள்ளோம். பல நிகழ்ச்சிகளில், பல சந்தர்ப்பங்களில் நீங்கள் ஐயாவை போட்டோ எடுத்திருக்கலாம், மேலும் இனி எடுக்கலாம். இவை அனைத்தையும் தேதி, இடம் சூழல் போன்ற குறிப்புகளோடு பின்வரும் இ-மெயிலுக்கு அனுப்பி வைக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். **email : sribagavathmission@gmail.com**

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555